# கடவுளின் கவலை

"பார்வதி! பார்த்தாயா, இந்தப் பாபாத்மாக்களை. நம்மை, ஆண்டாண்டு காலமாகப் படுத்துகிற பாடு போதாதென்று இப்போது வேறு இழிவும் பழியும் உண்டாக்குகிறார்கள், வேதாரண்யம்! திருமறைக்காடு, என்பர் சைவர்கள். பாடல்பெற்ற ஸ்தலம். திருத்துறைப் பூண்டிதான், என்ன சாமான்யமா! ஊர் முழுதுமே, கோயிலுக்குத்தான் சொந்தம் திருவாரூர், தியாகேசனின் இருப்பிடம்! புதுக்கோட்டை, புவனேஸ்வரி வாழ்கிறாள்! மதுரையம்பதியோ, உனக்கும் எனக்கும் உறைவிடம் எந்த ஊரில்தான் நமக்குக் கோயில் இல்லாமலிருக்கிறது பெரிய கோயில், சின்னகோயில் அடடா! தஞ்சை மாவட்டம், சாதாரணமானதா எங்குப் பார்த்தாலும் கோயில்கள்தான். . ."

"எதைப்பற்றி, நாதா, இப்படி விசனத்தோடு பேசுகிறீர்கள்?"

"எதைப்பற்றிப் பேசப்போகிறேன், பார்வதி, சமீபத்தில் இந்த வாயுவும் வருணனும் புகுந்து அக்கிரமம் செய்திருக்கிறார்களே, அதைப்பற்றித்தான் பேசுகிறேன்......"

"அதைப்பற்றிக் குறிப்பிடவந்த நீங்கள், பாபாத் மாக்களைப் பற்றியல்லவா, வேதனையோடு குறிப்பிடுகிறீர்கள்?

"ஆமாம், பார்வதி! இப்படி ஊரூருக்கு ஒவ்வோர் கோயிலிருந்தும் அங்கிருக்கும் சாமிகளுக்கு ஸ்தல புராணங்களிருந்தும், அவர்களுடைய சக்தியைப்பற்றி இத்தனை நாள் பெருமையாகப் பேசப்பட்டு வந்தும், புயல் வீசி மழைகொட்டி ஆயிரக்கணக்கானோர் சாகவும். பல லட்சம்பேர் பதைக்கவுமான கோரக் காட்சிகளைப் பற்றிக் கண்ணீர் வடிக்கும் சேதிகள் வந்து கொண்டிருக்கும் நேரத்தில், இந்தப் பாபாத்மாக்கள் என்ன செய்கிறார்கள் தெரியுமா?"

''எந்தப் பாபாத்மாக்கள் பிரபு நாஸ்திகர்கள் என்று ஏசப்படுகிறார்களே, அந்த சுயமரியாதைக்காரர்களா. . .''

''அவர்கள் எவ்வளவோ நல்லவர்கள் என்று நான் உனக்கு அடிக்கடி சொல்லுவதுண்டே, அவர்கள் அல்ல தேவி – புயலையும் மழையையும் கண்டு, மனந் துடித்துப் போய், மனிதாபிமானத்துடன் ஓடி ஓடி அலைகிறார்கள் மக்களுக்கு உதவி செய்ய. ஆனால், பக்தர்கள் என்று சொல்லிக்கொண்டு திரிகிறார்களே, பூலோகத்தில் அந்தப் பாபாத்மாக்கள்தான் பார்வதி, நமக்கு இழிவும் பழியும் கொண்டு வருகிறார்கள். . .''

''பக்தர்களைப்போய் பாபாத்மாக்கள் என்கிறீர்களே நாதா?''

''சங்கடம் வந்த நேரத்தில், காட்டிக் கொடுப்பவனை நீ என்னவென்று சொல்லுவாய்?''

''கயவன், என்பேன்!''

''உண்மை புரிந்தும் ஊரை ஏய்ப்பவனை. . .''

''எத்தன்!''

''ஊரே எரியும்போதும், பீடிக்கு நெருப்பு கேட்பவனை...''

''மூடன், எனலாம்!''

'' இதையெல்லாம் சேர்த்துத்தான், நான் பாபாத்மா, என்றேன்! பார்வதி, இதோ பார் – பட்டினி கிடக்கும் குடும்பங் களை – அதோ, உடலுப்பி அழுகிக் கிடக்கும் பிணங்களைக் கண்டாயா – ஆடு மாடுகள் எத்தனை ஆயிரம் செத்துக் கிடக்கின்றன – தண்ணீருக்குள் மிதக்கும் வீடுகள் வெள்ளம் போல் நீரிருந்தும் குடிதண்ணீருக்கு அவதிப்படுகிற கூட்டம் – அடடா! என்ன கொடுமை, கண்ணீர் வருகிறதல்லவா, உனக்கு? இப்படிப்பட்ட சமயத்தில், தங்கள் தங்களால் இயன்றதை உதவி செய்வதா அதற்குப் பதில் என்னை இழுத்துக் கொண்டு போய் விட்டு சந்தி சிரிக்கச் செய்வதா?''

''அப்படி என்ன செய்தார்கள் நாதா?''

''பக்தர்கள், என்னுடைய பிரதாபத்தை, இந்த நேரமாகப் பார்த்துப் பேசுகிறார்கள், தேவி! பாரேன் இதோ கும்ப கோணத்துக்கு அருகில் மாங்குடி என்றூராம். அங்கே ஒரு கோயிலாம். மழைக்குப் போய் ஒண்டினானாம், ஒரு பையன், அவனை ஒரு தேள் கொட்டிற்றாம்! அலறியடித்துக் கொண்டு ஓடினானாம் – அவன் அப்படி ஓடிய கொஞ்ச நேரத்துக்கெல்லாம்

இடியும் புயலும் வரவே, அந்தக் கோயில் மடமடவெனச் சாய்ந்ததாம். தேள் கொட்டியிராவிட்டால், பையன் ஓடியிருக்க மாட்டன்! இடிந்து விழுந்த கோயிலுக்குள் சிக்கியிருப்பானல்லவா! அதனால் அவனை தேள் ரூபத்தில் போய் காப்பாற்றி விட்டே னாம் அதற்காக, அபஷேகம் ஆராதனை எல்லாம் செய்திருக் கிறார்கள். . .''

''அது எப்படி பாப காரியமாகும் பிராணநாதா? நமக்குத் தரும் 'சர்டிபிகேட்'தானே, அது!''

''சரிதான், போ! அதே சமயத்தில் அருப்புக்கோட்டைக்குப் பக்கத்திலுள்ள மானூரில் என்ன நடந்திருக்கிறது தெரியுமா?''

'' அங்கும் இப்படி ஏதாவது காக்கை ஒட பனம்பழம் விழுந்த கதை' நடந்துள்ளதோ?''

''அதுதான் இல்லை! வெள்ளம் வந்துவிட்டது. அந்த ஊர் மக்கள் பயந்துபோய், அங்கிருந்த சுப்பிரமணியர் கோயில் ஒன்றுக்குள் புகுந்து கொண்டார்களாம். கொஞ்ச நேரத்தில் அந்தக் கோயில் இடிந்து விழுந்து அத்தனை பேரும் நாசமாகியிருக் கிறார்கள்!''

''ஐயோ! அப்படியா?''

''ஆமாம், தேவி! அதே சமயத்தில், இன்னொரு சேதி, வந்திருக்கிறது பத்திரிகைகளில், கடலே ஊருக்குள் புகுந்த தல்லவா, வேதாரண்யத்தில் – புயல் ஒய வேண்டுமென்று ராமபஜனை செய்தார்களாம் அங்கு! பிறகுதான் புயல் ஓய்ந்ததாம்!''

''எனக்குக்கூடச் சிரிப்பு வருகிறது, நாதா! கேட்கும் போது''

''உனக்கு சிரிப்பு வருகிறது – உன்னைப் பார்த்து 'ஏம்மா, பார்வதி! சீர்காழி குளக்கரையில் அழுத குழவியாம் ஞான சம்பந்தனுக்குப் பாலூட்டப் போனாயே, இப்போது எங்களுடைய குழந்தைகளுக்கும் கொஞ்சம் வந்து கொடேன்! என்று கேட்டால், – உனக்கும் எனக்கும் இருக்கட்டும் – நமது பக்தகோடிகளுக்கு எவ்வளவு கோபம் வரும்?''

''கிருபானந்தவாரியாரும் குன்றக்குடிகளும் 'ருத்திர மூர்த்தி' களாகி விடுவார்களே!''

''அவர்களைப் பார்த்து இந்த சுயமரியாதைக்காரர்கள் இப்போது கேட்டால், என்ன பதில் சொல்லுவார்கள் ஏன், பார்வதி! எனக்கே வெட்கமாயிருக்கிறது – இராமேஸ்வரம், ஜனாதிபதி ராசேந்திர பிரசாத்தே வந்து வணங்கிய இடம் –

கும்பகோணம், கூடிய விரைவில் மகாமகம் நடைபெற இருக்கிறது; சர்க்காரே விசேஷ சிரத்தையெடுத்துக் கொண்டிருக்கிறது; திருச்சியிலே தாயுமானவர் இருக்கிறார் – அவர் கதைதான் தெரியும் உனக்கு. வெள்ளத்தால் தவித்த தாய்க்கே அருள் பாலித்ததாக புராணீகர்கள் எழுதி வைத்திருக்கிறார்கள் – காரைக்குடி, பரமக்குடி, பட்டுக்கோட்டை நாடியம்மன் பிரசித்தம் பெற்றவள் – இப்படி, கோயிலில்லா ஊர் எங்கே உண்டு பழமொழியே இருக்கிறது, கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று இவ்வளவு இருந்தும் ஏனய்யா புயலும் மழையும், என்று கேட்டால் என்ன பதில் சொல்லுவார்கள், பக்தர்கள்?''

''இந்த நேரத்தில், அதைப் பற்றியெல்லாம் கேட்க மாட்டார்களே, சுயமரியாதைக்காரர்கள். மகேசனைவிட, மக்கள்தானே தங்களுக்கு முக்கியம் என்று சொல்லி வருகிறார்கள். . .''

''அப்படியானால், அவர்களைத்தானே, பார்வதி, உண்மையான பக்தர்கள் என்று சொல்ல வேண்டும்''

''ஆமாம், நாதா, அதுதான் சரியெனப்படுகிறது எனக்கும்...''

